18th Augus 1960] [Sri R. Venkataraman]

வந்திருக்கிறார்கள். இவைகளையெல்லாம் ஆராய்ந்துதான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். வேறு வழி இல்லை என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அப்படித் தவறுகள் நடக்காது பார்த்துக் கொள்வதற்கு கனம் சின்னதுரை அவர்கள் ஏதாவது யோசனைகளைச் செய்து வைத்திருந்தால், அதைச் சர்க்காருக்கு எழுதி அனுப்பும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி அனுப்பி வைத்தால் அதைப்பற்றிச் சர்க்கார் பரிசிலனை செய்து முடிவுக்கு வருவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER: The question is—

"That the Madras Sales of Motor Spirit Taxation (Amendment) Bill, 1960 (L.A. Bill No. 23 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

### V—GOVERNMENT MOTION—CHANGE IN DATE FOR NON-OFFICIAL BUSINESS.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, it was decided by the Assembly yesterday that 20th Saturday should be a non-official day. But now the Leaders of Parties want that tomorrow (19th August 1960) should be allotted for transacting non-official business. I also agree to that proposal.

Sir, I move—

"That non-official business be transacted on Friday, the 19th August instead of on Saturday the 20th August, as decided earlier."

The motion was put and carried.

SRI S. M. ANNAMALAI: What about day after tomorrow, Sir?

MR. SPEAKER: To-day we hope to do five Bills. We have got five more Bills. We will do that day after to-morrow. Tomorrow will be a non-official day, instead of official day. Tomorrow's official business will be done day after tomorrow.

### IV.—GOVERNMENT BILLS—*cont.*

### (5) THE MADRAS PRESERVATION OF PRIVATE FORESTS (AMENDMENT) BILL, 1960

* THE HON. SRI M. A. MANICKAVELU: I beg to move—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1960 be taken into consideration."

The Madras Preservation of Private Forests Act was enacted in the year 1946, with a view to prevent the indiscriminate destruction

[Sri M. A. Manickavelu] [18th August 1960

of private forests and interference with the customary and prescriptive rights therein. The Act, as it stands now, applies to forests situated in "estates" as defined in the Madras Estates Land Act, 1908 and to private forests situated in other areas which have a contiguous area exceeding 100 acres and which may be declared by the State Government to be forests for the purposes of the Act. The Act provides that no owner of any forest shall, without the previous sanction of the District Collector, sell, mortgage, lease or otherwise alienate the whole or any portion of the forest and that no owner of any forest and no person claiming under him, whether by virtue of a contract, licence or any other transaction entered into before or after the commencement of the Madras Preservation of Private Forests Act, or any other person shall, without the previous permission of the District Collector, cut trees or do any act likely to denude the forest or diminish its utility as a forest, except the removal of dead or fallen trees, or any act done for the usual or customary domestic purposes or for making agricultural implements. The Act was originally enacted as a temporary measure in 1946 and it was replaced by a new temporary Act in 1949. The life of this Act was being extended from time to time and it was last extended up to 2nd December 1961.

It has now been brought to the notice of the Government that there has been widespread, indiscriminate cutting of trees in private forests, especially after the publication of the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960, in areas to which the Madras Preservation of Private Forests Act, 1949, as it now stands does not apply. Such indiscriminate cutting will considerably depreciate the utility and value of the lands and it may adversely affect the proper use to which such land may be put hereafter. The Government have therefore decided to prevent this indiscriminate cutting of trees immediately by enlarging the scope of the Madras Preservation of Private Forests Act, 1949 and making it applicable to private forests, in areas other than estates, which have a contiguous area exceeding 30 acres and also with a view to expeditious action, by empowering the District Collector to declare such private forests to be forests for the purposes of the Act by notification in the District Gazette. The Bill seeks to give effect to this decision.

I request the House, Sir, to accept the motion.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1960 be taken into consideration."

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, எஸ்டேட்டுகளில் இருக்கக்கூடிய தனி நபர்களுக்குச் சொந்தமான, காடுகளில் இருக்கக்கூடிய மரங்களை வெட்டுவதைத் தடுப்பதற்காக, முப்பது ஏக்கருக்கு அதிகமாக இருக்கக்கூடிய காடுகளில் இருக்கும் மரங்களைப் பாதுகாப்பதற்காக, இந்த

18th August 1960] [Sri M. Kalyanasundaram]

மசோதா கொண்டு வரப்பட்டுள்ளது. இது வரவேற்கக்கூடியதாக இருக்கிறது; இதில் யாருக்கும் ஆட்சேபணை இருக்க முடியாது. தனிப்பட்டவர்களின் கையில் இன்னும் சொந்தமாகக் காடுகளை வைத்திருக்க வேண்டுமா என்பதைப்பற்றி யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. தனிப்பட்டவர்களுக்கு சொந்தமாகக் காடுகளை வைத்துக்கொள்ளலாம் என்று சொல்லிவிட்டு, அதன் பிறகு அவர்களை மரங்களை வெட்டக்கூடாது என்று சொல்வது சரியாக இருக்குமா என்பதைப்பற்றியும் ஆலோசனை செய்யவேண்டியதாக இருக்கிறது. சாதாரணமாக சொல்வதுண்டு: "தேன் எடுத்தவன் புறங்கையை நக்காமல் இருப்பானா" என்று. அதைப்போலவே காடுகளை தனிப்பட்ட முறையில் வைத்துக்கொள்ளலாம் என்று சொல்லிவிட்டு, அதன் பிறகு அவற்றிலிருந்து மரங்களை வெட்டக் கூடாது என்று சொன்னால் அது சாத்தியமா? அவர்கள் மரங்களை வெட்டாமல் இருப்பார்களா? அதைக் கண்காணிக்க போலீஸ் காரர்களைப் போடமுடியுமா? அவர்கள் மரங்களைத் திருட்டுத் தனமாக வெட்டிக்கொண்டுதான் போவார்கள். அதற்குப் பாது காப்பு அளிப்பது என்பது முடியாது. அதைத் தடுத்துவிடுவோம் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. ஒவ்வொரு காட்டையும் பாது காக்க வேண்டும் என்று போலீஸாரைப் போடுவது என்பது முடியாத காரியம். எஸ்டேட் சொந்தக்காரர்கள் தண்ணீர் ஊற்றி அந்த மரங்களை அவர்கள் வளர்க்கவில்லை. அவர்கள் பயிர் செய்த காடுகளும் அல்ல. யாரையோ அந்தக் காலத்தில் காட்டிக்கொடுத்து, ராஜாக்களுக்கு தொண்டு செய்து, பட்டயங்கள் வாங்கி, விவசாயிகளை ஏமாற்றி வாங்கிய காடுகள் அவைகள் எல்லாம். அவைகளைத் தங்களுடைய சொந்தக் காடுகளாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். எஸ்டேட் சரித்திரத்தைப் பரிசீலனை செய்து பார்த்தால், இது நன்றாகத் தெரிய வரும். ஆகவே, எஸ்டேட் சொந்தக்காரர்கள் காடுகளை தங்களுக்குச் சொந்தமாக வைத்துக்கொள்வதற்கு எந்தவிதத்திலும் உரிமை கிடையாது. ஆகவே அந்தக் காடுகளையெல்லாம் சர்க்காரே எடுத்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அவர்களே வாங்கி மரங்களைப் பயிர் செய்திருந்தால் அதை விட்டு வைப்பதில் ஆட்சேபணை இல்லை. ஆகவே எஸ்டேட்டுகளில் 20 அல்லது 25 ஏக்கருக்கு மேல் இருக்கக்கூடிய காடுகளையெல்லாம் சர்க்காரே எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி எடுத்துக்கொண்டு அவற்றை காட்டிலாகாவிடம் ஒப்படைக்க வேண்டும். எஸ்டேட்டுக்காரர்களால் அவர்களுடைய முயற்சியால், அவர்களுடைய பணச்செலவால் வளர்க்கப்பட்ட காடுகளாக இருந்தால் அவைகளுக்கு நஷ்டஈடு வேண்டுமானால் கொடுத்துவிட்டு எடுத்துக் கொள்ளலாம். தனியாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. அவைகளையெல்லாம் பாரஸ்ட் டிபார்ட்மெண்டுடன் சேர்த்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். 1946-ம் வருஷத்தில் எஸ்டேட் அபாலிஷன் சட்டம் மூலமாகவே இதைச் செய்திருக்கலாம்; அப்படிச் செய்திருக்க முடியும் என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த ஆலோசனையைச் சர்க்கார் ஏற்றுக்கொண்டு, அதற்கு வேண்டிய நடவடிக்கையை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[18th August 1960

* SRI J. MATHA GOWDER : கனம் சபாநாயகர் அவர்களே, முன்பு தனிப்பட்ட ஒருவருக்கு 100 ஏக்கர் காடுகள் இருக்கலாம் என்று இருந்தது. அது இன்றைக்கு முப்பது ஏக்கராக குறைக்கப்பட்டிருக்கிறது. என்றாலும்கூட இன்றைக்குத் தனிப்பட்டவர்களிடம் காடுகள் இருக்கவேண்டிய அவசியம் என்ன என்று கேட்கிறேன். அதைப்பற்றி நாம் கொஞ்சம் யோசிக்கவேண்டும். சர்க்கார் பாரஸ்ட் என்று வைத்திருக்கிறோம். தனிப்பட்டவர்களிடம் பாரஸ்ட் எதற்காக, அவர்கள் என்ன அதில் விவசாயம் செய்கிறார்களா அதை வைத்துக்கொண்டு அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைப்பற்றியும் நாம் பரிசீலிக்க வேண்டியதாக இருக்கிறது. உதாரணமாக நீலகிரி ஜில்லாவைப் பொறுத்த வரையில் கடலூரை எடுத்துக்கொண்டால், அங்கே உள்ள மரங்கள் யாராலும் வளர்க்கப்பட்டவை அல்ல. அங்குள்ள ஏராளமான மரங்கள் எல்லாம் இயற்கையாகவே வளர்ந்த மரங்கள்தான். சில தினங்களுக்கு முன்னதாக அங்கே ஓவாலி என்ற இடத்தில் 100 மரங்களை வெட்டி சுமார் 14 லட்சம் ரூபாய்க்கு விற்கப்பட்டிருக்கிறது. அந்தக் காடுகள் எல்லாம் தனிப்பட்ட முறையில் வைக்கப்பட்டிருக்கின்றன. அவை சுமார் 14 லட்சம் ரூபாய்க்கு விற்கப்பட்டிருக்கிறது. ஓவாலி Group Estate என்பது 99 வருஷ லீசுக்கு விடப்பட்ட இடம். வெள்ளைக்காரர்கள் காலத்தில் 99 வருஷ லீசுக்குக் கொடுத்திருக்கிறார்கள். அங்கே என்ன செய்திருக்கிறார்கள்? அவர்களுக்கு வேண்டிய இடத்தில் டி செடிகளைப் போட்டு, பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலத்தை பாரஸ்ட் ஏரியா என்ற பெயரில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இது ப்ரைவேட் பாரஸ்ட் ஆக்ட்டில் இருக்கிறது. இருந்தாலும் இந்த பூமியில் இருக்கக்கூடிய மரங்களை அழித்தவுடன் வேறு எந்த விவசாயமும் செய்வதற்கு விடப்படுவதில்லை. அந்த மரங்களை அவர்களே வெட்டி எடுத்துக்கொண்டு போகிறார்கள். அதனால் ஏராளமான லாபம் ஏற்படுகிறது. ஓவாலி பிரச்சினை பற்றி அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். தொண்ணூற்றொன்பது வருஷ லீஸ் முடிந்த பிறகு அதை எடுத்துக்கொண்டுவிட வேண்டுமென்று இந்த மன்றத்தில் சொல்லியிருக்கிறேன். இதைப்பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இதில் பல திருட்டுகள் நடக்கின்றன. பக்கத்தில் சர்க்கார் காட்டு இலாகா இருக்கும்போது பல லட்சக் கணக்கான ரூபாய் மரங்கள் போயிருக்கின்றன. இதைப்பற்றியும் சொல்லியிருக்கிறார்கள். அதுவும் இங்கே வெட்டி கேரளாவுக்குக் கொண்டுபோனபோது அதைத் தடுத்து நிறுத்தியிருக்கிறோம். அப்படி நிறுத்தப்பட்ட மரம் ஒன்றுமட்டும் 12 ஆயிரம் ரூபாய்க்கு போயிருக்கிறது. இந்த நிலையில் அவர்களுக்கு நாம் அதிகமாகக் காடுகளை விடுவது சரியல்ல. அந்தக் காடுகள் யார் கையில் இருக்கிறது என்று பார்க்க வேண்டும். ஒன்று கர்நாடகத்தில் இருப்பவர்களிடம்—மைசூரில் இருப்பவர்களிடம் இருக்கும். அல்லது கேரளாவில் இருப்பவர்களிடம் இருக்கும். இந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களுக்கே பூமி இல்லாமல் இருக்கும்போது வேறு மாநிலத்தைச் சேர்ந்த ஜமீன்தார்களுக்கு எதற்காக ஆயிரக்கணக்கான பூமி இருக்க

18th August 1960] [Sri J. Matha Gowder]

வேண்டும். வெள்ளைக்காரன் காலத்தில் கொடுக்கப்பட்டிருக்கலாம். இந்தக் காலத்திற்கு அது பொருத்தமில்லை என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இதற்கு எந்தவிதமான நியாயமும் இல்லை. ஆகவே இன்றையதினம் அந்தப் பூமிகளை பிரித்துக் கொடுத்துவிட வேண்டும். காடாக இருந்தால் எதற்காக 30 ஏக்கருக்குமேல் என்று இருக்கவேண்டும்? ஐந்து ஏக்கருக்கு மேல் என்று ஏன் வைக்கக்கூடாது என்பதையும் சொல்லிக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் தனி நபர்களுடைய காடு பாது காப்பு மசோதாவை வரவேற்கிறேன். ஆனால் இதை அமுல் நடத்துவதில் சில சிக்கல்கள் இருக்கும் என்பதை எடுத்துக் காட்ட ஆவலுறுகிறேன். தனி நபர் காடுகள் பலதரப்பட்டு இருக்கின்றன. பல உயரங்களில் இருக்கின்றன. சமவெளியில் இருக்கக்கூடிய காடுகளை மாத்திரம் மனதில் வைத்துக்கொண்டு பெரும் மரங்கள் இருப்பதை வெட்டு வதற்கு நம்மிடம் உத்தரவு கோரப்படும். சிலவிடங்களில் ப்ரைவேட் காடுகளுக்கு அருகில் ரிசர்வ் பாரஸ்டுகள் இருக் கின்றன. ரிசர்வ் பாரஸ்டு மரங்களை வெட்டி ப்ரைவேட் பாரஸ்டு காடுகளில் கொண்டுவந்து போட்டுக்கொண்டு அதற்குப் பிறகு அப்புறப்படுத்துகிறார்கள். வன இலாகாவில் இருந்து மரங்களை வெட்டுவதற்கு கூப்புகளாக ஏலம் விடுகிறார்கள். ப்ரைவேட் பாரஸ்டு வெட்டுவதாக பலவிடங்களில் ரிசர்வ் பாரஸ்டுகள் வெட்டப்பட்டு வருகின்றன. ஆகவே எந்தக் காடு களாக இருந்தாலும் வெட்டுவதற்கு நம்மிடம் அனுமதி வாங்கும் படியாக இருக்கவேண்டும். வன இலாகா அதிகாரிகளே இவற்றை மேற்பார்வை செய்யும்படியாக இருக்கவேண்டும். ஆகவே தனி நபர் காடுகளை பராமரிப்பதற்கு ஏற்பாடு செய்யும்போதே அதில் உள்ள மரங்களை வெட்டுவதற்கும் விதிகள் வகுக்கவேண்டுமென்று சொல்லிக்கொள்ளுகிறேன். அதோடு மாத்திரம் இல்லாமல் அழிக்கப்பட்ட காடுகளில் திரும்ப ரப்பர் பயிர் செய்வதற்கும் கோரினால்—காஷ்வரினா ப்ளாண்டேஷனுக்கு என்ன என்ன வசதிகள் செய்யப்படுகிறதோ அவை எல்லாம் இந்த காடு களுக்கும் செய்து கொடுக்கப்படவேண்டும். ஆதலால் இவைகளை எல்லாம் மனதில் வைத்துக்கொண்டு தனி நபர் காடுகளை அழிப் பதை தடுப்பதற்கு விதி வகுப்பது மட்டும் போதாது, அவைகளைப் பராமரிப்பதற்கும், அபிவிருத்தி செய்வதற்கும், வழிவகுக்கும் விதிகளை அமைக்கவேண்டுமென்று கோரி எனது உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU : ஸார், இந்தச் சட்டத் தின்கீழ் இரண்டுவித பாதுகாப்பு, ஒன்று எஸ்டேட் என்று சொல்கிற ஜமீன் காடுகளை எல்லாம்—அதை எடுத்துக்கொண்டு விடப்போகிறோம் என்று நினைத்து—உரிமையாளர்களே அழித்துவிட முனைந்தார்கள். அதைத் தடுப்பதற்காகத்தான் இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டது. ஓரளவுக்கு இந்தச் சட்டத்தினால் அவர்கள் அந்தக் காட்டை அழிக்காமல் பாது

காத்தோம். சிலர் சட்டத்திற்கு முன்பே அழித்துவிட்டார்கள். இரண்டாவது, இதுமாதிரி நிறைய ப்ரைவேட் பாரஸ்டுகள் இருக்கின்றன. அதையும் ஓரளவு இஷ்டப்பிரகாரம் அழிக்காமல் இருப்பதற்கு நூறு ஏக்கருக்கு இருக்கக்கூடிய பகுதிகள் அழிக்கப்படக்கூடாது என்று ஏற்படுத்தப்பட்டிருந்தது. நடைமுறையில் பார்க்கப்போனால் நூறு ஏக்கர் என்று வைத்துவிட்டால் சரியான முறையில் பாதுகாக்கப் படாது. முப்பது ஏக்கர் என்று வைத்தால் ஓரளவு எல்லாம் பாதுகாக்கப்படும் என்று செய்திருக்கிறோம். ஆனால் கேட்கலாம், இருபது எக்கர் என்று ஏன் வைக்கக்கூடாது ஐந்து ஏக்கர் என்று ஏன் வைக்கக்கூடாது என்று. நூறு ஏக்கர் என்பதை முப்பது எக்கர் என்று குறைந்து வைத்திருப்பதே நியாயமானது. எந்த அளவுக்குக் குறைக்கலாமோ அந்த அளவுக்குத்தான் குறைக்கலாம். இன்னும் அதிகம் குறைப்பது சரியல்ல. ஆனால் கனம் அங்கத்தினர் 99 வருஷ லீஸ் பற்றியும் சொன்னார்கள். அது வேறு அலாதி பிரச்சினை. தொண்ணூற்றொன்பது வருஷ கெடு எப்பொழுது முடிகிறது என்று தெரியவில்லை. தனியாக அதைப் பரிசீலிக்கவேண்டும்.

இன்னொன்று. தனி நபர் காடுகளில் மரங்களை நியாயமாக வெட்டக்கூடிய உரிமை இருப்பதனால் பக்கத்தில் உள்ள ரிசர்வ் காடுகளில் இருந்து வெட்டி இங்கே கொண்டுவந்து போட்டுக்கொண்டு தங்கள் காட்டில் வெட்டியது என்று எடுத்துச் சொல்வது பற்றி ஒரு அங்கத்தினர் சொன்னார், சட்டம் என்று இருந்தால் அதில் இருந்து தப்பித்துக்கொள்ள பல திருட்டுத்தனம் நடக்கிறது. இந்தமாதிரி திருட்டுத்தனங்களை எல்லாம் கண்டுபிடித்து எப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமோ அவ்வாறு எடுத்துக்கொள்ளவேண்டும். இது வேறு பிரச்னை. காடுகளை பராமரிப்பதோடு இந்தத் திருட்டுத்தனங்களைச் சேர்க்கக்கூடாது. இந்த மசோதாவில் எழுகிற பிரச்சினை இதுதான். நூறு ஏக்கருக்கு என்பதை முப்பது ஏக்கர் என்று ஆக்கினால் அதிக அளவு மரங்கள் வெட்டுவதைத் தடுக்கலாம் என்றே இந்த மசோதா கொண்டுவரப்படுகிறது. ஆகையால் இதை கனம் அங்கத்தினர்கள் அங்கீகரிக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER: The question is—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1960 be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2, 3, 4 and 5 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1960 be passed."

18th August 1960]

MR. SPEAKER : The question is—

" That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1960 be passed."

The motion was put and carried and the Bill was passed.

(6) THE MADRAS (TRANSFERRED TERRITORY) EXTENSION OF LAWS BILL, 1960 (L.A. BILL NO. 17 OF 1960).

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, I beg to move—

'That the Madras (Transferred Territory) Extension of Laws Bill, 1960 (L.A. Bill No. 17 of 1960) be taken into consideration.'

சபாநாயகர் அவர்களே, இது, கன்னியாகுமரி, செங்கோட்டை தாலுகா பகுதிகள் நம்மோடு இணைந்ததற்குப் பிற்பாடு, இதற்கு முன் திருவிதாங்கூர்-கொச்சி ராஜ்யத்திலிருந்த சட்டங்கள்தான் அங்கு அமுலில் இருந்துகொண்டு வந்திருக்கின்றன ; இப்பொழுது சென்னை ராஜ்யத்திற்குரிய சட்டங்களை அந்தப் பிரதேசங்களில் அமுல் நடத்துவதற்கு ஏற்பாடு செய்வதற்காக பரிசீலனை செய்து இதற்கு முன்பு ஒரு மசோதா கொண்டுவந்து சில சட்டங்களை அங்கு அமுலுக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த மசோதா மூலம் இன்னும் சில சட்டங்களை அந்தப் பகுதிகளில் அமுலாக்குவதற்காகக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. கனம் அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள், இதில் மூன்று ஷெட்யூல்கள் இருப்பதை. ஒன்று, முதல் ஷெட்யூல், அந்தச் சட்டங்களை அப்படியே அந்தப் பிரதேசங்களில் அமுலாக்க வேண்டியது. இரண்டாவது ஷெட்யூல், சில மாறுதல்களோடு அமையவேண்டியது, மூன்றாவது ஷெட்யூல் அவசியம் இல்லாததால் அவைகள் ரத்து செய்யப்படுகிறது. இந்த மசோதாவில் அதிக விவாதம் இருப்பதற்கு இடமில்லை. ஆகவே, இதை ஏற்றுக் கொள்ளுமாறு இந்த சபையைக் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Motion moved—

'That the Madras (Transferred Territory) Extension of Laws Bill, 1960 (L.A. Bill No. 17 of 1960) be taken into consideration.'

* SRI K. SATTANATHA KARAYALAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா, செங்கோட்டை தாலூகா, கன்னியாகுமரியில் உள்ள நான்கு தாலுக்காக்களுக்கும் புதிதாக இங்குள்ள சுமார் 50 சட்டங்களை அந்த வட்டாரத்திற்கும் அமுலுக்குக் கொண்டுவருவதற்குள்ள ஒரு மசோதாவாகும். நான் இந்த சந்தர்ப்பத்தில் சொல்ல விரும்புவதெல்லாம் ஒவ்வொரு சட்டத்தைப் பொறுத்த மட்டும், "கம்பாரட்டீவாக" இதற்குத்